Regd. No TN/MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 420212 4 பக்கம் விலை 45 காசு.



**தமிழ் வளர**

தமிழ்மொழி வளர வேண்டுமென்ற மனப்பான்மை மட்டும் இருந்தால் போதாது. சுவையும் பயனுமுள்ள ஏடுகளையே படிக்க வேண்டும்.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

**திருமணம்**

திருமணம் என்பது மணமக்களை மட்டும் பொறுத்ததல்ல. நாட்டின் முன்னேற்றத்திலும் தொடர்பு கொண்டிருக்கிறது.

-தந்தை பெரியார்



மலர்: 6 சென்னை 1-8-82 ஞாயிறு வெளியூர் 2-8-82 திங்கள் இதழ் 282

## கொள்ளை லாப—பதுக்கல் வியாபாரிகளுக்கு

# புரட்சித்தலைவர் எச்சரிக்கை



மதுரை நகரில் நடைபெற்ற மாபெரும் கழகக் கூட்டத்தில செல்வி ஜெயலலிதா பேசினார். கொட்டும் மழையிலும் நனைந்தபடி அமர்ந்திருந்த கூட்டத்தின் ஒரு பகுதி மேடையில் முசிறிப்புத்தன் அமர்ந்துள்ளார். (செல்வி ஜெயலலிதா பேச்சு விவரம் 2-ம் பக்கம்)

## 'ஒரு சிலர் பயன் பெறுவதற்காக கோடிக்கணக்கான மக்கள் துன்பப்படுவதா?'

**மதுரை, ஆக. 1- விலைவாசியைக் கட்டுப்படுத்த அரசு நடவடிக்கை எடுக்க முன்வந்தால் வியாபாரிகள் போராட்டம் என்கிறார்கள. இவர்கள் 100 பேர் என்றால லட்சககணக்கான மக்கள் பாதிககப்படுவதை எப்படி அனுமதிக்க முடியும் எனறு முதல்வர் புரட்சித்தலைவர் கேட்டார்.**

தூத்துக்குடியிலிருந்து சென்னை செல்லும் வழியில் மதுரை வந்த முதல்வர் புரட்சித் தலைவரை நிருபர்கள் சந்தித்தனர். அப்போது அவர் மேற்கண்டவாறு கூறினார்.

நிருபர்கள் கேட்ட கேள்விகளுக்கு புரட்சித் தலைவர் பின்வருமாறு பதில் அளித்தார்.

நிருபர்: விவசாய இலாகாவுக்கு டெல்லியிலிருந்து இந்தியில் கடிதம் வந்திருப்பதாக அமைச்சர் காளிமுத்து குறிப்பிட்டிருக்கிறாரே?

புரட்சித்தலைவர்: விசாரித்துச் சொல்கிறேன். இந்தியில் கடிதம் வந்திருந்தால் மத்தியில் தலைமைப் பொறுப்பில் உள்ளவர்கள் அப்படி அனுப்பியிருக்க மாட்டார்கள். ஏனெனில் அவர்கள் வீண் வம்பை விலைக்கு வாங்க விரும்பமாட்டார்கள். இடையில் இருப்பவர்கள் இப்படி இந்திக் கடிதங்களை அனுப்பி தவறு செய்யக் கூடும்.

உதாரணமாக மொரார்ஜி பிரதமராக இருந்தபோது டெல்லியிருந்து எனக்கு இந்தியில் கடிதம் வந்தது. அதனை நான் திருப்பி அனுப்பிவிட்டேன். பின்னர் மொரார்ஜி தேசாயைச் சந்தித்தபோது அந்தக் கடிதத்திற்கு ஏன் பதில் எழுதவில்லை என்றுகேட்டார். கடிதமே வரவில்லை என்று கூறினேன். பிறகு அவர் விசாரணை நடத்தினார். இந்தியில் கடிதம் அனுப்பியது யார் என்று தெரிந்து கடிந்து கொண்டார். இம்மாதிரித் தவறுகளுக்கு இடையில் இருப்பவர்கள் காரணமாக இருக்கிறார்கள்.

தற்போது மத்திய அரசுக்கும் மாநில அரசுக்கும் இடையே நல்ல உறவு இருக்கிறது. மத்திய அரசு இந்தியைத் திணிக்க விரும்பவில்லை. இடையில் இருப்பவர்கள் ஏதாவது செய்து விடுகிறார்கள்.

நிருபர்: இலவச உணவுத் திட்டம் செயல்படும் முறை உங்களுக்கு திருப்தி தருகிறதா?

புரட்சித்தலைவர்: இலவச உணவுத் திட்டம் மிகப் பெரும்பான்மையான இடங்களில் சிறப்பாகச் செயல்படுகிறது. சமையல் பாத்திரம் போதவில்லை. சாப்பாட்டுத்தட்டுக்கள் போதவில்லை என்று சில இடங்களிலிருந்து புகார்கள் வருகின்றன. அந்தப்புகார்கள் உடனுக்குடன் கவனிக்கப்பட்டு தக்க நடவடிக்கை எடுக்கப்படுகின்றது.

இலவச உணவுத்திட்டத்தில் ஆர்வம் காட்டாத ஒரு சிலரும் இருக்கத்தான் செய்கிறார்கள். அதற்கு அவர்களுடைய அரசியல் உணர்வு காரணமாக இருக்கலாம். இந்த திட்டம் சரியாகச் செயல்படக்கூடாது என்று அவர்கள் சார்ந்திருக்கின்ற கட்சி கட்டளையிட்டிருக்கலாம். அல்லது உள்ளத்தில் அம்மாதிரியான எண்ணம் ஏற்பட்டிருக்கலாம்.

### 85 சதவிகிதம் வருகை

இலவச உணவு திட்டத்தை செயல்படுத்தத் தொடங்கிய பின்னர் பள்ளிக்கு வரும் குழந்தைகளின் எண்ணிக்கையும் அதிகரித்திருக்கிறது. வயது வந்த குழந்தைகளில் 85 சதவிகிதம் பேர் இப்போது பள்ளிக்கு வருகிறார்கள்.

நிருபர்:- இலவச உணவுத் திட்டத்தை மக்கள் வரவேற்கிறார்களா?

புரட்சித் தலைவர்:- மக்கள்வரவேற்கிறார்கள். உதாரணத்திற்குஒன்றைச் சொல்கிறேன். ராமநாதபுரம் மாவட்டத்தைச் சேர்ந்த இஸ்லாமிய ஆசிரியர் ஒருவர்எனக்குக் கடிதம் எழுதியிருக்கிறார். இலவச உணவு திட்டத்திற்கு ஒரு மாத ஊதியத்தை நன்கொடையாக அளிப்பதாகவும் அடுத்து ஒவ்வொரு மாதமும் ஒரு நாள் ஊதியத்தை நன்கொடையாக அளிப்பதாகவும் ஓய்வு பெற்றபின்னரும் ஓய்வு ஊதியத்தில் ஒரு நாள் சம்பளத்தை நன்கொடையாக அளிப்பதாகவும் எழுதியிருக்கிறார்.

நிருபர்: பள்ளிக்கு ஒழுங்காக வரும் மாணவாகளுக்கு மாதம் 30 ரூபாய் வீதம் அளிக்கப்படும் என்று ஆந்திர மாநில அரசு அறிவித்திருக்கிறதே?

புரட்சித் தலைவர்: தமிழகத்தைப் பொறுத்தவரையில் பள்ளிக்குக் குழந்தைகளை அழைக்க வேண்டிய நிலைஇல்லை. ஆசிரியர்கள் வீடு தேடிச் சென்று குழந்தைகளை அழைத்த காலம் இருந்தது. அந்த நிலை இப்போது இல்லை. ஒரு வகுப்பிற்கு இத்தனை குழந்தைகள் என்றால் அத்தனை குழந்தைகளும் பொதுவாக வருகிறார்கள். பள்ளிக்கு வரும் மாணவர்களின் எண்ணிக்கையும் அதிகரித்திருக்கிறது.

### வெளிநாட்டு உதவி

நிருபர்: இலவச உணவுத்திட்டத்திற்கு வெளிநாட்டினர் உதவி செய்ய முன் வந்தால் அரசு ஏற்குமா?

புரட்சித்தலைவர்: வெளிநாடுகளில் இருந்து தனிப்பட்டவர்கள்உதவக் கூடும். இந்தத் திட்டத்திற்கான அன்றாடச் செலவை அரசு தான் ஏற்கவேண்டும். வெளிநாட்டில் உள்ளவர்கள் மனமுவந்து தரும் உதவி, உணவு மையங்கள் கட்டுவதற்குப் பயன்படுத்தப்படும். ஆனால் இந்தத் திட்டத்திற்கு உதவ வேண்டும் என்று இந்தத் திட்டம் பற்றி வெளிநாட்டினர் ஆர்வத்தோடு விசாரிக்கிறார்கள்.

நிருபர்: இலவச உணவுத் திட்டத்திற்காக கூடுதலாக அரிசி ஒதுக்க வேண்டும் என்று மத்திய அரசைக் கோருவோம் என்று நிதி அமைச்சர் நாவலர் கூறியிருக்கிறாரே?

புரட்சித் தலைவர்: தேவைப்பட்டால் மத்திய அரசின் உதவியைக்கோருவோம். ஒரு மாநிலத்தில் இத்தகைய திட்டம் வெற்றி பெற்று அதன் மூலம் ஏழ்மை குறையுமானால் அது மத்திய அரசுக்கு நல்லது தானே! ஆகவே நல்லெண்ணத்தின் அடிப்படையில் மத்திய அரசின் உதவியைக் கேட்போம் என்று நாவலர் கூறியிருக்கலாம்.

நிருபர்: இலவச உணவுத் திட்டத்தைச் செயல்படுத்துவதற்காக போலீசாருக்கு அளிக்கப்படும் சலுகைகள் ரத்து செய்யப்படும் என்று கூறப்படுகிறதே?

புரட்சித் தலைவர்:- வீண் வதந்தி. அப்படி ஒன்றும் இல்லை. வதந்திகளுக்கு முக்கியத்துவம் கொடுக்க வேண்டாம்.

### பெரியகுளம் தேர்தல்

நிருபர்: பெரியகுளம் நாடாளுமன்றத்தொகுதி இடைத் தேர்தலில் அனைத்திந்திய அண்ணா தி.மு. கழகம் பெண் வேட்பாளரை நிறுத்தும் என்று சொல்லப்படுகிறதே?

புரட்சித் தலைவர்:- வதந்திகளை நம்ப வேண்டாம்.

நிருபர்: வேட்பாளர் தேர்வு எப்போது?

புரட்சித் தலைவர்:- அவர்கள் அறிவிக்கட்டும்.

நிருபர்:- மதுரைமாவட்டம் கல்லாறுத் திட்டம் எந்த நிலையில் உள்ளது?

புரட்சித் தலைவர்:- அந்தத் திட்டத்திலிருந்து தமிழக அரசு பின் வாங்கவில்லை.

நிருபர்:- வைகைஅணையிலிருந்து மதுரை நகருக்குக் குழாய்கள் மூலம் தண்ணீர் கொண்டுவரப் படுமா?

புரட்சித் தலைவர்:- வைகை அணையிலிருந்து மதுரை நகர மக்களுக்குக் குடிதண்ணீர் கொடுக்க வேண்டும் என்ற ஆசை தான். தண்ணீர்த் தட்டுப்பாடு ஏற்படும்போது இந்தத் திட்டம் என்று இல்லாமல் நிரந்தரமாகத் தண்ணீர்த் திட்டம் காணவே விரும்புகிறோம்.



### சுமுக உறவு

நிருபர்: கேரளத்தில் வீணாகக் கடலில் கலக்கும் நதிகளின் தண்ணீரை தமிழகத்துக்கு திருப்பி விடுவது பற்றி பேசுவீர்களா?

புரட்சித் தலைவர்: அத்தகைய முயற்சி இருந்து வருகிறது. அண்டை மாநில மக்களுடன் நாம் விரோதம் குரோதம் கொள்ளக் கூடாது. மாநிலங்களுக்கு இடையே சுமுகமான உறவு இருப்பது அவசியம். இதில் எல்லோரும் கவனம் செலுத்த வேண்டும்.

நிருபர்: சென்னை நகர மக்களுக்கு கிருஷ்ணா நதி தண்ணீர் கிடைக்குமா?

புரட்சித் தலைவர்: தற்போது அதிகாரிகள் மட்டத்தில் பேச்சு வார்த்தை நடந்து வருகிறது. தமிழகத்திற்கு வரும் வழியில் கிருஷ்ணா நதித்தண்ணீரை ஆந்திரம் பயன் படுத்தினால் என்ன செய்வது என்பது பற்றி பேச்சு வார்த்தை நடைபெறுகிறது. இந்தத் திட்டம் செயல்படத் தொடங்கிவிட்டால் மூன்றே ஆண்டுகளில் முடிந்து விடும். காலதாமதமானால் அதிகபட்சம்6 ஆண்டுகளில் செயல்படுத்தப்படும்,

நிருபர்: காவிரித் தண்ணீர் பற்றாக் குறையால் குறுவை சாகுபடி பாதிக்

(2-ம்பக்கம் பார்க்க)

**சென்னை அண்ணா சாலையில்**

## பயங்கர விபத்து: வேன் - லாரி மோதலில் ஐந்து பேர் சாவு

**சென்னை, ஆக. 1- சென்னை அண்ணா சாலையில் இன்று அதிகாலை ஏற்பட்ட பயங்கர விபத்தில் 5 பேர் மரணம் அடைந்தனர். லாரியும் - டெம்போ ஒன்றும் பயங்கர மாக மோதி இந்த விபத்து ஏற்பட்டது.**

அண்ணா சாலை நந்தனத்தில் பெரியார் மாளிகை எதிரில் இந்த பயங்கரவிபத்து நடந்தது.

இந்த பயங்கர விபத்து இன்று அதிகாலை மூன்று மணிக்கு நடந்தது.

இறந்தவர்கள் அனைவரும் காய்கறி வியாபாரம் செய்பவர்கள்.

நங்கநல்லூர்பழவந்தாங்கலைச் சேர்ந்த காய்கறி வியாபாரிகள் கொத்தவால்சாவடிக்கு காய்கறி வாங்க ஒரு டெம்போவில் வந்தனர்.

இந்த டெம்போ, நந்தனம்பெரியார்பில்டிங் எதிரே வந்த போது எதிரே வந்த லாரி இதன் மீது பயங்கரமாக மோதியது.

இந்த மோதலால்டெம்போவில் இருந்தவர்கள் பயங்கரமாக நசுங்கி மரணம் அடைந்தனர்.

விபத்து நடந்த இடத்திலேயே 4 பேர் மரணம் அடைந்தனர்.

ஒருவர் மருத்துவ மனைக்கு எடுத்துச் செல்லும்போது மரணம் அடைந்தார்.

ராஜு வயது 25, செல்லப்பா வயது 32, ராஜபாண்டியன் வயது 25, பால்ராஜ் வயது 30, ராபர்ட் வயது 26, ஆகிய ஐவரும் இந்த விபத்தில் இறந்து விட்டனர்.

### டிரைவர் கைது

விபத்து நடந்தவுடன் லாரியை ஓட்டி வந்த டிரைவர் தலைமறைவாகி விட்டதாக கூறப்பட்டது.

பிறகு நடுப்பகலில் போலீசார் அந்த லாரி டிரைவரைக் கைது செய்தனர்.

கைது செய்யப்பட்ட லாரி டிரைவரின் பெயர் பாபு வயது-23.

இந்த விபத்து குறித்து போக்குவரத்துப் போலீசார் புலன் விசாரணை நடத்தி வருகிறார்கள்.

**தண்டையார்பேட்டையில்**

## தீ விபத்து: இருநூறு குடிசைகள் நாசம்

சென்னை, ஆக. 1— சென்னை தண்டையார் பேட்டையில் இன்று ஏற்பட்ட தீவிபத்தில் ஏராளமான குடிசைகள் எரிந்து விட்டன.

தண்டையார்பேட்டை கே.ஜே. மாநகரில் இந்த தீ விபத்து ஏற்பட்டது. 200-க்கும் மேற்பட்ட குடிசைகள் எரிந்தன. தீயணைக்கும் படையினர் விரைந்து சென்று தீயை அணைத்தனர்.

**குடிசை மாற்று வாரியத் தலைவர்**

## சுலோசனா சம்பத் 4-ம்தேதி பதவி ஏற்கிறார்

சென்னை, ஆக. 1— தமிழ்நாடு குடிசைமாற்று வாரியத் தலைவராக நியமிக்கப்பட்டுள்ள சுலோசனா சம்பத் இம்மாதம் 4-ம் தேதி காலை 11-மணிக்கு பதவி ஏற்கிறார்.

## ஊனமுற்றோருக்கு வேலை வாய்ப்பு தருவதில் இந்தியாவிலேயே முதலிடம் பெறும் தமிழகம்

புதுடெல்லி, ஆக. 1— ஊனமுற்றவர்களுக்கு வேலைவாய்ப்பு அளிப்பதில் இந்தியாவிலேயே தமிழ்நாடு முதலிடம்வகிக்கிறது. கடந்த 2 ஆண்டுகளில்மட்டும் 3 ஆயிரத்து 387 ஊனமுற்றவாகளுக்கு தமிழகத்தில் வேலை வாய்ப்பு அளிக்கப்பட்டு இருக்கிறது.

ஊனமுற்றவர்களுக்கு இந்தியாவில் உள்ள பல்வேறு மாநில வேலை வாய்ப்பு தேடித் தரும் நிறுவனங்கள் மூலம் கடந்த 2 ஆண்டுகளில் 7ஆயிரத்து 241 பேருக்கு வேலை வாய்ப்பு அளிககப்பட்டிருககிறது.

இப்படிவேலைவாய்ப்பு அளிப்பதில் தமிழகம் இந்தியாவிலேயே முதலிடம் வகிக்கிறது. கடந்த 1979 செப்டம்பர் மாதம் முதல் 1981 செப்டம்பர் வரையிலான காலத்தில் மட்டும் தமிழகத்தில் 3 ஆயிரத்து387பேர்களுக்கு வேலைவாய்ப்பு அளிக்கப்பட்டுள்ளது.

அடுத்தபடியாக இடம் பெறுவது மகாராஷ்டிரா மாநிலம். இந்த மாநிலத்தில் ஆயிரத்து 704 ஊனமுற்றவர்களுக்கு வேலை வாய்பபு அளிக்கப்பட்டிருக்கிறது.

மாநில அரசு வேலை தேடித்தரும் நிறுவனங்கள் மூலம் அடுத்தபடி இடம் பெறுவதுமுறையே அரியானா, ஆந்திரம் மற்றும் கேரளம் ஆகிய மாநிலங்கள் ஆகும்.

ஊனமுற்றவர்களுக்கு வேலை வாய்ப்பு அளித்து வாழ்க்கை வசதி ஏற்படுத்திக் கொடுப்பதற்கான 4 வகை திட்டங்களின் கீழ் 1981-82ஆம் ஆண்டில் மட்டும் மத்திய அரசு ரூபாய் 3 கோடியே 87 லட்சத்து 18 ஆயிரம் வழங்கியிருக்கிறது.

தாய்மை உணர்வோடு சமுதாய சேவை:

# சின்னஞ் சிறுவர்க்கு செல்வி ஜெயலலிதா உணவு பரிமாறினார்

**மதுரை, ஆக. 1- தாய்மை உணர்வோடு - சமூக சேவை அடிப்படையில் சின்னஞ்சிறு குழந்தைகளுக்கு இலவச மதிய சத்துணவை செல்வி ஜெயலலிதா பரிமாறினார். குழந்தைகள் உணவு உண்பதைக் கண்டு மகிழ்ந்தார்.**

மதுரையை அடுத்துள்ள சில பள்ளிகளுக்கு செல்வி ஜெயலலிதா சென்று மதிய உணவு உண்டு மகிழும் மழலை செல்வங்களைக் கண்டார்.

ஏழைக் குழந்தைகளுக்கு முதல்வர் புரட்சித் தலைவர் அரசு ஜூலை முதல் தேதி முதல் இலவச சத்துணவை வழங்கி வருவது தெரிந்ததே.

தமிழகம் முழுவதும் பட்டி தொட்டியெல்லாம் இந்த சத்துணவு வழங்கப் படுகிறது.

மதுரை வந்திருந்த செல்வி ஜெயலலிதா மதுரையை அடுத்துள்ள சிலபள்ளிகளுக்குச் சென்று மதிய உணவு பரிமாறினார்.

முசிறிப்புத்தன் எம். எல். ஏ., பி. அன்பழகன் எம். பி., மதுரை எஸ். பாண்டியன், லட்சுமி நாராயணன், சி. தங்கம் ஆகியோரும் அப்போது உடனிருந்தனர்.

சுலைமான் என்ற இடத்திற்கு செல்வி ஜெயலலிதா வந்தார்.

## மழலைகளுடன் அளவளாவினார்

அங்கு ஒரு மையத்தில் அப்போது மதிய உணவை தயாரித்துக் கொண்டிருந்தனர்.

அவரை சின்னஞ்சிறார்கள் சூழ்ந்து கொண்டனர். அவர்களுடன் ஜெயலலிதா அளவளாவினார்.

என்ன பாடம் படிக்கிறீர்கள் என்று கேட்டறிந்தார்.

பகலுணவால் இப்போது தினமும் வயிறு நிறைகிறது என்று ஒரு பாலகன் தெரிவித்தான்.

மதிய உணவு நேரம் வந்து விட்டதால் அங்கிருப்பவர்கள் உணவு பரிமாறத் தொடங்கினர்.

அப்போது செல்வி ஜெயலலிதாவும் தாய்மை உணர்வோடு அந்தசிறுவர் சிறுமிகளுக்கு உணவைப் பரிமாறினார்.

சிரித்து மகிழ்ந்தபடி அந்த சிறார்கள் உண்டு மகிழ்ந்தனர்.

சாப்பிட்டுக் கொண்டிருந்த ஒரு சிறுவன்து சட்டை பொத்தானைச் சரி செய்தார்.

மணலூர், திருப்பாச்சேத்தி, முத்தனேந்தல், ராஜகம்பீரம் ஆகிய இடங்களில் உள்ள பள்ளிகளுக்கு சென்று குழந்தைகள் மதியஉணவு சாப்பிடுவதைப்பார்த்தார்.

## பெண்கள் உற்சாக வரவேற்பு

பிறகு அண்ணாநகரில் உள்ள சமையல் கூடம் சென்று பார்த்தார்.

வழியில் பல இடங்களில் செல்வி ஜெயலலிதாவைக் கண்டதும் பெண்கள் கூட்டம் கூட்டமாகக் காரை நிறுத்தி சந்தித்துப் பேசினார்கள்.

குழந்தைகளை படிக்க வைக்க பள்ளிக்கு அனுப்புங்கள். மதிய உணவு கிடைக்கிறதா என்று அந்த தாய்மார்களிடம் ஜெயலலிதா கேட்டறிந்தார்.

"எங்கள் குழந்தைகளுக்கு எம். ஜி. ஆர். ஆட்சியில் இப்போது எல்லா நாளும் ஒரு வேளை வயிறார சாப்பாடு கிடைக்குது" என்று அந்தப் பெண்கள் மகிழ்வோடு கூறினார்கள்.

## பேட்டி

மதுரையில் நிருபர்களிடம் செல்வி ஜெயலலிதா கூறியதாவது:—

பேரறிஞர் அண்ணாவின் கொள்கையை கழகம் பின் பற்றி வருகிறது.

வாரிசு பிரச்னையை சிலர் வேண்டுமென்றே கிளப்புகிறார்கள்.

அண்ணா வாரிசு என்றுயாரையும் நியமிக்கவில்லை. அதே கொள்கையைத்தான் புரட்சித் தலைவர் பின்பற்றி வருகிறார்.

கட்சியில் தொண்டராக உழைத்து திறமையால் முன்னுக்கு வர வேண்டும். சலுகைகளை எதிர்பார்த்து பணியாற்றக் கூடாது.

ஆனால் தி. மு. க.வினரும் வேறு சிலரும் இந்தப் பிரச்னையைக் கிளப்புகிறார்கள்.

நாங்கள் யாரும் இதுபற்றி பேசவில்லை. வாரிசு என்று தலை தூக்கியது தி. மு. க. வில் தான். வாரிசு முறையை தி. மு. க. வில் திணிக்கப் பார்ப்பது கருணாநிதி தான்.

இவ்வாறு செல்வி ஜெயலலிதா கூறினார்.

இன்று மாலை

## வானொலியில் பண்ருட்டியார் பேசுகிறார்

சென்னை, ஆக. 1— மின்துறை அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் இன்று (ஞாயிறு) மாலை 7 மணிக்கு சென்னை வானொலியில் பேசுகிறார்.

வளரும் தமிழகம் பேச்சுத் தொடரில் "அதிகமின் உற்பத்திக்கு அரிய முயற்சிகள்" என்ற தலைப்பில் பேசுகிறார்.

தமிழகத்தில் உள்ள அனைத்து வானொலி நிலையங்களும் இதை அஞ்சல் செய்யும்.

## துறைமுக பகுதியில் பாவலர் பேசுகிறார்

சென்னை, ஆக 1— சென்னை துறைமுகப் பகுதி பிடாரியார்கோயில் தெருவில் நாளை மாலை 7 மணியளவில் கழக பொதுக் கூட்டம் நடைபெறுகிறது.

எம்.பாஸ்கரன் தலைமை வகிக்கிறார். மாநில திட்டக்குழு துணைத்தலைவர் பாவலர் முத்துசாமி சிறப்புரை ஆற்றுகிறார்.

வேளாண்மை தொழில்கள் இணையகத் தலைவர் லியாகத் அலிகான், இ. மதுசூதனன், ஏ. வி. கிருஷ்ணமூர்த்தி மண்ணடி கிருஷ்ணமூர்த்தி, கு. கஜேந்திர பாபு, எம்.பி. ஆனந்தன், எஸ். பி. டி. விஜயன், டி. ஆர். வெங்கடேசன் மற்றும்பலர் பேசுகிறார்கள்.

அண்ணாநகர்தொகுதியில்

## மன்றநிர்வாகிகள் கூட்டம்

சென்னை, ஆக. 1— சென்னை அண்ணாநகர் வட்டக் கழக நிர்வாகிகள் மற்றும் மன்ற நிர்வாகிகள் ஆலோசனைக் கூட்டம் இன்று மாலை 6 மணிக்கு கீழ்ப்பாக்கம் கார்டன் ஓட்டலில் நடைபெறுகிறது.

ஆ. தா. ராமசாமி, ஆ. தா. நிக்கோலஸ் முன்னிலை. கே. எம். முத்து தலைமை வகிக்கிறார்.

★ இழந்த செல்வாக்கை எந்தஜென்மத்திலும் மீண்டும் பெறமுடியாது

★ புரட்சித்தலைவரைப் பழிப்பதையே லட்சியமாகக் கொண்டிருக்கிறார்

இனவெறியைத் தூண்டி

# தமிழ்நாட்டு மக்களை ஏமாற்றும் கருணாநிதி

## 5 லட்சம் பேர் திரண்ட மதுரைக் கூட்டத்தில் செல்வி ஜெயலலிதா குற்றச்சாட்டு

**மதுரை, ஆக. 1- தமிழக மக்களை ஏமாற்றவே இனவெறியைத் தூண்டுகிறார் கருணாநிதி என்று செல்வி ஜெயலலிதா கூறினார். புரட்சித்தலைவரைப் பழிப்பதையே லட்சியமாகக் கொண்டுள்ள கருணாநிதியால் எந்தஜென்மத்திலும் இழந்தசெல்வாக்கைப் பெறமுடியாது என்றும் செல்வி ஜெயலலிதா கூறினார்.**

மதுரை வடக்கு மாசி வீதி-மேலமாசி வீதி சந்திப்பில் மதுரை எஸ். பாண்டியன் தலைமையில் நடைபெற்ற கழகப் பொதுக்கூட்டத்தில் செல்வி ஜெயலலிதா கலந்துகொண்டு சிறப்புரையாற்றினார்.

கூட்டத்தில் செல்வி ஜெயலலிதா, முசிறிப்புத்தன் எம். எல். ஏ., மேயர் பாலகிருஷ்ணன், துணைமேயர் நவநீத கிருஷ்ணன், நெல்லை பாலாஜி, என். லட்சுமி நாராயணன், தேவகி பாண்டியன், பிரமிளா காந்தி, வேலம்மாள், அன்னம்மாள், சி. தங்கம் டி. ஆர். லோகநாதன், சாதுராஜன், தமிழ்செல்வன், முனவர்ஷெரீப் ஆகியோர் பேசினர்.

## 5 லட்சம் பேர் பங்கேற்பு

இந்த மாபெரும் பொதுக் கூட்டத்தில் 5 லட்சம் பேர் கலந்து கொண்டனர்.

பொதுக் கூட்டத்தில் செல்வி ஜெயலலிதா பேசுகையில் கூறியதாவது:-

எனக்கு முன்பு பேசிய முசிறிப்புத்தன் கருணாநிதி கட்சியினர் என்னைக் கன்னடக்காரி என்று கூறியதைப் பற்றி சொன்னார்.

72ம் ஆண்டு கன்னடக் கிளர்ச்சிக்காரர்கள் மத்தியில் தமிழில் பேசிய தமிழச்சி என்ற சம்பவத்தை எடுத்துக் கூறினார்.

நான் சுத்தமான தமிழச்சி. என் தாயும் தமிழச்சிதான் என்பதையும் குறிப்பிட்டார்.

அதே போல புரட்சித் தலைவரையும் கருணாநிதி பல முறை பேசி தோல்வி கண்டார்.

தமிழக மக்களை ஏமாற்றுவதற்காக இனவெறி, மொழிவெறியைத் தூண்டும்கருணாநிதியைக் கேட்கிறேன், திராவிட இயக்க கொள்கையை சொல்லிக் கொடுத்த தந்தை பெரியார் யார்?

## தேளும் கருணாநிதியும்

அவர் சுத்தமான கன்னடத்துக்காரர் என்பதைக் கருணாநிதிக்கு திரும்பிப்பார் என்று சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன்.

இந்த சந்தர்ப்பத்தில் ராமகிருஷ்ண பரமஹம்சர் தனது சீடர்களுக்கு கூறிய கதை நினைவுக்கு வருகிறது.

'ஒரு முனிவர் நதியில் குளித்துக் கொண்டிருக்கும்போது ஒரு தேள் தத்தளித்துக்கொண்டிருந்தது. அந்தத்தேளைக்காப்பாற்றுவதற்காக இரு கைகளாலும் பிடித்துத் தூக்கியபோது அது அவரைக் கொட்டியது. வலிபொறுக்க முடியாமல் கீழே போட்டுவிட்டார். மீண்டும் தண்ணீரில் தேள் தத்தளித்துக் கொண்டிருந்தது. மீண்டும் தூக்கினார். மீண்டும் கொட்டியது. கீழே போட்டார்.

இப்படித் தொடர்ந்து 4, 5 முறை தூக்கினார். கொட்டியது. கீழே போட்டார். கடைசியில் கரை சேர்த்து விட்டார்.

இதைக் கரையிலிருந்து பார்த்த மாடு மேய்க்கும் சிறுவன் முனிவரிடம் சென்று, தேள் கொட்டும் என்று தெரியுமே ஏன் காப்பாற்றினீர்கள்? எனக்கு ஒன்றுமே புரியவில்லையே என்று கேட்டான்.

'தம்பி தேள் கொட்டுவது அதன் சுபாவம். ஆபத்திலிருந்து கரை சேர்ப்பதுஎனக்குதெரிந்த தர்மம் — சுபாவம். எப்படியோ கரைசேர்த்து விட்டு விட்டேன்' என்றார் முனிவர்.

"என் கடமையைச் செய்ததில்எனக்குதிருப்தி. அதற்கு கொட்டுவதில் திருப்தி" என்றார்.

## கருணாநிதியின் விஷமத்தனம்

அதேபோல புரட்சித் தலைவர் புண்ணியவானாகவும், கருணாநிதி தேளாகவும் தோன்றுகின்றனர்.

கருணாநிதி, என்ற தேள் எத்தனை தடவை புரட்சித்தலைவரைக் கொட்டியது? அதையெல்லாம் பொறுத்துக் கொண்டு கருணாநிதியை முதலமைச்சராக ஆக்கி கரை சேர்த்தவர் புரட்சித்தலைவர்.

அண்ணா இருந்தபோதே கருணாநிதி என்ற தேள் புரட்சித் தலைவரைக் கொட்ட ஆரம்பித்தது. திராவிட இயக்கம் இருக்கும்போது தனிமனிதன் பெயரில் எப்படி மன்றம் இருக்கலாம் என்று கருணாநிதி அண்ணாவிடம் வத்தி வைத்தார்.

புரட்சித்தலைவர் தி.மு.க.வில் சேரும்முன்பே எம்.ஜி.ஆர். மன்றங்கள் செயல்பட்டன என்பது நாடறிந்த ஒன்று.

## கழகத்தின் தூண்கள்

அந்த மன்றங்கள் கழகத்திற்குத் தூணாக இருந்தன. அதனால் கருணாநிதி விஷமத்திற்கு அண்ணா இடங்கொடுக்காமலிருந்தார்.

மன்றத்தை ஒழித்து விட்டால் புரட்சித் தலைவரை ஒழித்து விடலாம் என்ற எண்ணத்தில் கருணாநிதி என்ற தேள் கொட்டியது.

காமராசர்பிறந்த நாள் விழாவில் கலந்து கொண்ட புரட்சித் தலைவர், காமராஜர் என் தலைவர், அண்ணா என் வழிகாட்டி என்றார். இதைக் கருணாநிதி பிரச்சினையாக்கினார். அதற்கும் அண்ணா இடம் கொடுக்க வில்லை.

## கருணாநிதியை முதல்வராக்கிய புரட்சித் தலைவர்

இப்படிப் புரட்சித் தலைவரைக் கருணாநிதி என்ற தேள் பல தடவை கொட்டியது. இருந்தும் புரட்சித்தலைவர், கருணாநிதியைத் தொடர்ந்து ஆதரித்து வந்தார்.

1969ம் ஆண்டு அண்ணாவின் மறைவுக்கு பிறகு முதலமைச்சர் நாவலரா? கருணாநிதியா என்ற பிரச்சினைவந்தது. கட்சிக்குள் கருணாநிதிக்கு கடும் எதிர்ப்பு இருந்தது.

மதியழகன், மதுரை முத்தண்ணன், அன்பழகன், சத்தியவாணிமுத்து போன்றவர்கள் கருணாநிதி முதலமைச்சராவதை வலிமையாக எதிர்த்தார்கள்.

அவர்களிடம் புரட்சித் தலைவர், கருணாநிதிக்காக ஆதரவுதிரட்டினார். புரட்சித்தலைவர் பெருமுயற்சி எடுக்காமலிருந்தால் கருணாநிதி முதலமைச்சராக வந்திருக்க முடியாது.

## நிதியமைச்சர் பதவி கேட்ட மதியழகன்

மதியழகனையும்கருணாநிதியையும் ராமாவரம் தோட்டத்தில் சந்திக்கச் செய்து பேச வைத்தும், மதியழகன் சம்மதிக்கவில்லை. தனக்கு நிதியமைச்சர் பதவி வேண்டும் என்று கேட்டார். அதற்கு புரட்சித்தலைவர் சம்மதிக்கவில்லை.

மதியழகனைச் சமாதானப்படுத்தி சம்மதிக்க வைத்து மதியழகன் முன்மொழிவார். சத்தியவாணிமுத்து வழிமொழிய வேண்டும் என்ற அளவிற்குபுரட்சித் தலைவர் முயற்சிஎடுத்துக் கொண்டார்.

கட்சிக் கூட்டத்தில் ஏற்கனவே கருணாநிதிக்கு எதிர்ப்பு தெரிவித்த மதுரை முத்தண்ணனைப் பேசவிடாமல் பக்கத்திலே வைத்துக் கொண்டார் புரட்சித்தலைவர்.

கருணாநிதிக்கு தி. மு. கழக தலைவர் பதவியும் புரட்சித்தலைவரால் தான் கிடைத்தது.

ஆரம்பகாலத்தில் தி.மு.க.வில் தலைவர் பதவி இல்லை. தந்தை பெரியாருக்காக அது காலியாக இருந்தது. தந்தை பெரியார் எப்போது வருவாரோ அது வரை தலைவர்பதவிகாலியாக இருக்கும் என்று அண்ணா கூறியிருந்தார்.

அந்த சமயத்தில் (69 ம் ஆண்டு) பொதுச் செயலாளர் பதவியை கருணாநிதிக்குத் தரவேண்டும் என்று புரட்சித் தலைவர் கூறினார்.

ஏனென்றால் ஆட்சித் தலைவர் ஒருவர், கட்சித்தலைவர் ஒருவர் என்றால் தகராறு ஏற்படும் என்று மதுரை முத்தண்ணன் யோசனை தெரிவித்தார்.

இதன்படி கட்சித் தலைவராக முதலமைச்சராக கருணாநிதியும் பொதுச் செயலாளராக நாவலரும், வர புரட்சித்தலைவர் பெரும் முயற்சிஎடுத்தார்.

அப்படிப்பட்ட மனம் கொண்ட புரட்சித் தலைவரை கருணாநிதி என்ற தேள் கொட்டியது.

மீண்டும் கதைக்கு வருகிறேன். மாட்டுக்கார சிறுவன், "அந்த தேளை விட்டுவிட்டால் தன்னையும் கொட்டும் வழியில் போவோரையும் கொட்டும். எனவே அதனை விட்டுவிடக் கூடாது" என்று பாறாங்கல்லைத்தூக்கிப்போட்டுக் கொன்றான். அது கதை.

1972ம் ஆண்டு கருணாநிதி என்ற தேள் புரட்சித் தலைவரைக்கொட்டியது. கட்சியிலிருந்து தூக்கி எறிந்தார்.

## கருணாநிதி செல்லாக்காசே

அந்தப் பொல்லாத மனிதர்புரட்சித்தலைவரை ஒழிக்கக் கங்கணம் கட்டிக் கொண்டார்.

அதன் பின்னர் 1977 ம் ஆண்டு தேர்தலில் தமிழக மக்கள் கருணாநிதி கட்சியின் தலையில் பாறாங்கல்லைப் போட்டார்கள்.

1980 ம் ஆண்டு பெரிய பாறாங்கல்லைப் போட்டு தமிழக அரசியலில் தலை தூக்கவிடாமல் செய்துவிட்டார்கள்,

தமிழக மக்கள். தாய்மார்கள் ஆதரவை எப்போதும் கருணாநிதி பெறமுடியாது. எந்த ஜென்மத்திலும் இழந்த செல்வாக்கைப் பெற முடியாது.

புரட்சித்தலைவரைப் பழிப்பதையே லட்சியமாகக்கொண்டிருக்கிறார் கருணாநிதி.

அண்மையில் ஆகாஷ்வாணி ஒலிபரப்பு பிரச்சினையில் தமிழக மக்களின் உணர்வை மதித்து வானொலி என்று மாற்றி அமைத்த பிரதமர் இந்திராவுக்கு பாராட்டுத் தந்தி அனுப்பினார் புரட்சித்தலைவர்.

## மக்களை மதிப்பவர் புரட்சித் தலைவர்

உண்மையான ஜனநாயகவாதி எம்.ஜி.ஆர். என்றால் தமிழக மக்களின் உணர்ச்சியை மதித்திருக்க வேண்டாமா என்று கருணாநிதி கேட்டிருக்கிறார்.

புரட்சித்தலைவர் என்றைக்கு தமிழக மக்களின் உணர்வைமதிக்கவில்லை?

அண்மையில் சேலத்தில்காமராஜர்சிலைவைப்பதில் மக்களின் குரலுக்கு மதிப்பளித்து சர்வகட்சி வேண்டுகோளின்படி சுமுக உறவு காணவில்லையா?

மாமேதை லெனின் அரசியலில் இருப்பவர்களுக்கு நாணயம், உண்மை இருக்க வேண்டும் என்றார். அரசியலில் நாணயம் என்பது கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்றுவது. இதுதான் கோடிக்கணக்கான மக்களுக்கும் அரசியல் தலைவர்களுக்கும் உள்ள தொடர்பாகும்.

தேர்தல் வாக்குறுதிகளை புரட்சித்தலைவர் நிறைவேற்றவில்லை என்று கருணாநிதி பழி சுமத்துகிறார்.

1980ம் ஆண்டு தேர்தலில் கொடுத்த வாக்குறுதிகளை இரண்டரை

(4-ம் பத்தி பார்க்க)

# முதல்வர் எச்சரிக்கை...

கப்படுமா?

புரட்சித்தலைவர்:- மேட்டூர் அணையிலிருந்து 12 கோடி கன அடி தண்ணீர் திறந்துவிடப்பட்டிருக்கிறது. எனவே குறுவை சாகுபடி பாதிக்காது.

நிருபர்: விலைவாசியைக் கட்டுப்படுத்த அரசு நடவடிக்கை எடுத்தால் வியாபாரிகள் போராட்டம் என்று அறிவிக்கிறார்களே?

புரட்சித்தலைவர்: விலைவாசியைக் கட்டுப்படுத்த அரசு நடவடிக்கை எடுக்க முன் வந்தால் வியாபாரிகள் போராட்டம் என்கிறார்கள். அந்த வரியைக் குறைஎன்றும்இந்த வரியைக் குறை என்றும் கோருகிறார்கள் — இவர்கள் 100பேர் என்றால் லட்சக்கணக்கானமக்கள்- கோடிக்கணக்கான மக்கள்பாதிக்கப்படுவதை எப்படி அனுமதிக்க முடியும்? எல்லா வியாபாரிகளையும்சொல்லவில்லை. மக்களுக்குத் தேவையான உணவுப் பொருட்களைப் பதுக்கி அதிக விலைக்கு விற்கும் வியாபாரிகளும் இருக்கத்தானே செய்கிறார்கள்?

## வியாபாரிகட்கு வேண்டுகோள்

இவர்களுக்கு எதிராகப் போராட்டம் என்று லட்சக்கணக்கான மக்கள் எழுந்தால் என்ன ஆகும்? அத்தகைய வியாபாரிகள் எண்ணிப் பார்க்க வேண்டாமா? இரண்டே வழிகள் தான் இருக்கின்றன. ஒன்று உணவுப் பொருள்களைப் பதுக்கிக் கொள்ளை லாபம் அடிக்கும் வியாபாரிகள்மீது சட்டப்படி நடவடிக்கை எடுப்பது. மற்றொன்று சமூக—தியாக உணர்வோடு வியாபாரிகள் நடந்து கொள்வது. இதனை வியாபாரிகளுக்கு வேண்டுகோளாக விடுக்கிறேன். பொதுமக்கள் சார்பில் எச்சரிக்கையாகக் கூறுகிறேன். வியாபாரத்தில் ஈடுபட்டுள்ளவர்களுக்கும் குடும்பம் குழந்தைகள் உண்டு. அவர்கள் எத்தனையோ குடும்பங்களுக்கு மத்தியில் தானே வாழ்கிறார்கள்?

## அரசின் எண்ணம்

இது தமிழக அரசின் எண்ணம் மட்டுமல்ல. இந்திய அரசின் எண்ணமும் கூட.

மக்களைத் தூண்டி விடும் சிலர் வெளியே இருக்கிறார்கள். அவர்கள் பொதுமக்களைத் தூண்டிவிட்டால் என்ன நிலைமை ஏற்படும்?

விரல்விட்டு எண்ணக் கூடிய நக்சல்பாரிகளால் பணக்காரர்கள் நடமாட முடியாத நிலைமை ஏற்படவில்லையா? ஒரு மாவட்டமே பாதிக்கப்பட வில்லையா? இதனை வியாபாரிகள் எண்ணிப் பார்க்கவேண்டும்.

பதுக்கல் — கொள்ளை லாபம் என்று வந்தால் நக்சல்பாரி மனப்பான்மையினர் உருவாக மாட்டார்களா? எனவே வியாபாரிகள் அரசுடன் ஒத்துழைக்க வேண்டும். விலைவாசி உயர்வால் - பதுக்கலால்தங்கள் குழந்தைகள் பட்டினி கிடப்பதை பெற்றோர் உற்றார் பார்த்துக் கொண்டுஇருப்பார்களா? இதனையும் வியாபாரிகள் எண்ணிப் பார்த்து அரசுடன் ஒத்துழைக்க வேண்டும். விலைவாசியை உயர்த்திக் கொண்டே போனால் மக்கள் வேதனைப்பட மாட்டார்களா? விரக்தியின் விளிம்பிற்குச் செல்லமாட்டார்களா? வியாபாரிகளுக்குப் பாதுகாப்புக் கொடுப்பது அரசின் கடமை. ஆனால் விலை வாசியை உயர்த்திக் கொண்டே போகும் வியாபாரிகளுக்கு எதிராகப் போராட்டம் என்ற நிலைக்கு பொது மக்களே வருவார்களானால் எப்படிச் சமாளிக்க முடியும்?

வியாபாரிகளுக்கு ஆதரவு தரும் சில அரசியல்வாதிகளும் இருக்கிறார்கள். உணவு, விலைவாய்ப்பு பிரச்சினையை அரசியல்ஆக்கக் கூடாது. எதனையும் வாதம் செய்து கொண்டிருப்பவர் அரசியல்வாதி அல்ல. அரசியலை நடத்துபவர்கள் தான் அரசியல்வாதிகள்.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்.

திடீர் புரட்சி

## கீன்யாவில் ஆட்சியை ராணுவம் கைப்பற்றியது

லண்டன், ஆக. 1— கீன்யா நாட்டில் திடீர் புரட்சி ஏற்பட்டது. அந்த நாட்டு ராணுவம் ஆட்சியைக் கைப்பற்றியது.

(8-ம்பத்தி தொடர்ச்சி)

ஆண்டுக் காலத்தில் ஒவ்வொன்றாக புரட்சித் தலைவர் நிறைவேற்றி வருகிறார்.

## நிறைவேறிய திட்டங்கள்

குடிசைகளுக்கு மின் விளக்கு வசதி, மாவட்டந் தோறும் ஏழை மகளிருக்கு கைத்தொழில் மேம்பாட்டு இல்லங்கள், ஆதரவற்ற விதவைத்தாய்மார்களுக்கு வேலை வாய்ப்பு திட்டங்கள் மாணவ மாணவிகளுக்கு இலவசநோட்டுப் புத்தகம், ஆதிதிராவிட கிராமப்புற மக்களுக்கு வீட்டுவசதித் திட்டம், வீட்டுமனை பட்டாக்கள், முதியோர், உடல் ஊனமுற்றோர் உதவித் தொகை வழங்கி வருகிறார். இவற்றுக்கெல்லாம் சிகரம் வைத்தது போல தன்னிறைவுத் திட்டம் கிராமப்புறங்களில் நிறைவேற்றி வருகிறார்.

இவ்வாறு செல்வி ஜெயலலிதா கூறினார்.

## கேடயம் பரிசு

மதுரை நகர் மாவட்ட எம்.ஜி.ஆர். மன்றத்தின் சார்பில் செயலாளர் நவநீதகிருஷ்ணன் கேடயம் ஒன்றை செல்வி ஜெயலலிதாவுக்கு வழங்கினார்.

கழகத்தின் சார்பில் மதுரை நகர் மாவட்ட கழகச் செயலாளர் எஸ். பாண்டியன் தஞ்சாவூர்த் தட்டை செல்வி ஜெயலலிதாவுக்குப் பரிசாக வழங்கினார்.

இந்தித் திணிப்பு நடவடிக்கை

# அக்ரோ நிறுவன ஆண்டறிக்கை இந்தியில் வேண்டுமாம்

## மத்திய அரசின் கோரிக்கை

**கோவை, ஆக. 1- இந்தித் திணிப்பு நடவடிக்கையாக, தமிழகத்தின் அக்ரோ நிறுவன ஆண்டறிக்கையை இந்தியில் அனுப்பவேண்டும் என்று மத்திய அரசு கோரியுள்ளது.**

அமைச்சர் காளிமுத்து இந்த தகவலை கோயம்புத்தூரில் வெளியிட்டார்.

இந்தி பேசாத மக்கள் விரும்பும்வரை ஆங்கிலம் தொடர்ந்து இருக்கும் இந்தி மொழி திணிக்கப்படமாட்டாது என்று மறைந்த பிரதமர் நேரு வாக்குறுதி தந்தார்.

பிரதமர் இந்திரா காந்தியும் நேரு தந்த அந்த வாக்குறுதியை நிறைவேற்றுவேன் என்று உறுதி கூறியுள்ளார்.

ஆனாலும் மத்திய அரசில் இருப்பவர்கள் இந்தி திணிப்பதில் தீவிரம் காட்டி வருகின்றனர்.

ஆகாஷ்வாணி மூலமாக இந்தி திணிப்புக்கு ஒரு முயற்சியை மத்திய அரசு மேற்கொண்டது.

கழகம் தெரிவித்த கடும் கண்டனம்-கழக செயற்குழு எடுத்த தீர்மானம்-இவற்றின் விளைவால் பிரதமர் தலையிட்டு "ஆகாஷ்வாணியை" அகற்றினார்.

இப்போது இந்தி திணிப்பு வேறு ஒருவடிவில் வந்துள்ளது.

அக்ரோ இண்டஸ்டிரீஸ் நிறுவனம் தமிழகத்தில் உள்ளது.

இதன் ஆண்டறிக்கை ஆங்கிலத்தில் மத்திய அரசுக்கு அனுப்பப்படுவது வழக்கம்.

இப்போது மத்திய அரசு ஆண்டறிக்கையை இந்தியில கேட்கிறது.

மத்திய அரசு கேட்டுள்ள விவரத்தை அமைச்சர் காளிமுத்து வெளியிட்டார்.

கோவையில் அக்ரோ இண்டஸ்டிரீஸ் கார்ப்பரேஷன் சார்பில் டிராக்டர் வழங்கும் விழா நடைபெற்றது.

விவசாயிகளுக்கு டிராக்டர்களையும் பவர் டில்லர்களையும் அமைச்சர் காளிமுத்து வழங்கினார்.

அந்த விழாவில் அமைச்சர் காளிமுத்து பேசியதாவது:-

மத்திய அரசு மீண்டும் இந்தித் திணிப்பு பணியில் ஈடுபடத் தொடங்கி விட்டது.

அக்ரோ இண்டஸ்டிரீஸ் கார்ப்பரேஷனின் ஆண்டறிக்கையை ஆங்கிலத்தில் மட்டுமல்லாமல் இந்தியிலும் அனுப்புமாறு மத்திய அரசு கேட்டுள்ளது.

இது இந்தி திணிப்பு அல்லவா?

இந்தியில் ஆண்டறிக்கையை அனுப்பு என்று கேட்பது எப்படி சரியாகும்?

### இந்தி திணிப்பை எதிர்த்தே தீருவோம்

இப்படிப்பட்ட முறையில் இந்தி திணிப்பு முயற்சியில் மத்திய அரசு ஈடுபடப்பார்க்கிறது.

இந்திப்பிரச்னையை மீண்டும் நாங்கள் எழுப்ப வேண்டியிருக்கிறது என்பதற்காக வருத்தப்படுகிறோம்.

இந்தித் திணிப்பை மக்களிடம் நாங்கள் சொல்லித்தான் ஆக வேண்டும்.

மத்திய அரசு இந்தி திணிப்பில் எந்த அளவுக்கு நம்பிக்கை வைத்து செயல்படுகிறது என்பதையே இந்த உத்திரவு காட்டுகிறது.

ஆனால் நாம இந்தி திணிப்பை எதிர்த்தே தீருவோம்.

இவ்வாறு அமைச்சர் காளிமுத்து பேசினார்.



ரூ. 12 கோடி செலவில்

### ஆதி திராவிடர்களுக்கு வீடுகள்

கும்பகோணம், ஆக 1— ஆதி திராவிடர் மற்றும் ஏழை எளிய மக்களுக்கு இந்த ஆண்டு 40ஆயிரம் வீடுகள் கட்ட தமிழக அரசு முடிவு செய்துள்ளது. தமிழகத்தில் உள்ள கிராமப்பகுதிகளில் ரூபாய் 12 கோடி செலவில் இந்த வீடுகள் கட்டப்படும்.

தாலுக்கா மற்றும் கோட்டம் அளவிலான கிராமப்புற வீடுகட்டும் கூட்டுறவுச் சங்கங்கள் மூலம் இந்தவீடுகள் கட்டி முடிக்கப்படும் என்று தெரிகிறது.

### கட்டிடம்இடிந்து 8 பேர் சாவு

நாகபுரி, ஆக. 1— மகாராஷ்டிர மாநிலம் நாகபுரியில் கட்டிடம் ஒன்று இடிந்து விழுந்ததால் 3 குழந்தைகள் உட்பட 8 பேர் உயிரிழந்தனர். 5 பேர் காயம் அடைந்தனர்.

மகாராஷ்டிர மாநில உள்துறை அமைச்சர் ஸ்ரீகாந்த் ஜிக்கர், சம்பவம் நடந்த இடத்துக்கு விரைந்தார். தீயணைப்பு படையினர் மீட்புவேலையில் ஈடுபட்டனர்.

காயம் அடைந்தவர்கள் மருத்துவ மனையில் சேர்க்கப்பட்டனர்.

### வயது 136: ஆனாலும் விறகு வெட்டி வாழ்கிறார்

பீகிங், ஆக. 1— சீனாவில் ஒரு 136 வயதுக்காரர் தொண்டு கிழம் ஆனாலும் துவண்டு படுத்து இருக்கவில்லை.

மலைகளுக்குச் சென்று விறகு வெட்டி வாழ்க்கை நடத்தி வருகிறார்.

சீனாவில் தெற்குப் பகுதியில் 1846-ம் ஆண்டில் பிறந்தவர் இவர்.

தானிய உணவு வகைகளை சாப்பிடுகிறார். சமையலும் செய்கிறாராம்.

### டெல்லியில் பாரதியார் சிலை

புதுடெல்லி, ஆக. 1- மகாகவி பாரதியின் நூற்றாண்டு விழாவையொட்டி புதுடெல்லியில் பாரதியாரின் உருவச்சிலை அமைக்கப்படவிருக்கிறது. புதுடெல்லியில் எந்த இடத்தில் இந்தச் சிலையை வைப்பது என்பது பற்றி மத்திய வீட்டுவசதித் துறை ஆலோசித்து விரைவில் முடிவு செய்யும்.

மத்திய கல்வி மற்றும் சமூகநலத்துறை அமைச்சர் ஷீலா கவுல் பார்லிமெண்டில் இந்தத் தகவலை தெரிவித்தார்.

மதிய உணவு திட்டத்துக்கு உதவுக: மத்திய அமைச்சர்

### வசந்த்சாத்தேயிடம் திருநாவுக்கரசு வேண்டுகோள்

சென்னை, ஆக. 1- தமிழகத்தில் முதல்வர் புரட்சித்தலைவர் அமல்படுத்தி வரும் இலவச சத்துணவு திட்டத்திற்கு தாராளமாக உதவும்படி மத்திய அமைச்சா வசந்த் சாத்தேயிடம் அமைச்சர் திருநாவுக்கரசு வேண்டுகோள் விடுத்தார்.

அசோக் லேலண்டு தொழிற்சாலையில் நடந்த விழாவில் மத்திய அமைச்சர் வசந்த்சாத்தேயும், அமைச்சர் திருநாவுக்கரசும் கலந்து கொண்டனர்.

அசோக்லேலண்டு தொழிலாளர்களும், நிர்வாகத்தினரும் இணைந்து சமூக வளர்ச்சித் திட்டம் ஒன்றை துவக்கியுள்ளனர்.

அந்தத் திட்டத்தின் சார்பில் செங்கை மாவட்டத்தில் உள்ள 50 கிராமங்களுக்கு 50 டி. வி. செட்டுகள் வழங்கப்பட்டன.

இந்த விழாவுக்கு அமைச்சர் திருநாவுக்கரசு தலைமை வகிக்க மத்திய அமைச்சர் வசந்த்சாத்தே தொலைக் காட்சிப் பெட்டிகளை வழங்கினார்.

லேலண்டு நிர்வாக இயக்குநர் ஆர். ஜே. சஹானியும், லேலண்டு தொழிற்சங்கத் தலைவர் குசேலரும் வரவேற்புரை நிகழ்த்தினார்கள்.

விழாவுக்குத் தலைமை வகித்த அமைச்சர் திருநாவுக்கரசு கூறியதாவது:-

இங்கே இந்த திட்டத்தின்கீழ் ரூ. 2.7 லட்சம் செலவில் 50 தொலைக் காட்சிப் பெட்டிகளை 50கிராமங்களுக்கு வழங்குகிறார்கள்.

### பொருளாதார மேம்பாடு

மற்ற நிறுவனங்களும் இப்படிப்பட்ட நல்ல திட்டத்தை பின்பற்றி செயலாற்ற முன் வர வேண்டும்.

மைய அரசானாலும் சரி, மாநில அரசானாலும் சரி எல்லா மக்களும் எல்லா வசதியும் பெற வேண்டும். பொருளாதார வளர்ச்சி பெற வேண்டும்.

ஏழை-எளிய மக்களின் குழந்தைகள் நல்ல முறையில் வளர ஒரு வேளை சத்துணவு தர முதல்வர் புரட்சித்தலைவர் ஒரு திட்டத்தை அமல்படுத்தியுள்ளார்.

இந்தப் பெருந் திட்டம் ரூ. 100 கோடி செலவில் சுமார் 60 லட்சம் குழந்தைகளுக்கு ஒருவேளை நல்ல மதிய உணவு வழங்குகிறது.

இந்த நல்ல திட்டத்திற்கு பிரதமர் இந்திரா காந்தியும், மத்திய நிதி அமைச்சரும் இது முக்கிய திட்டம் இதற்கு உதவ வேண்டும் என்று கனிவோடும் பரிவோடும் கூறி இருக்கிறார்கள்.

இங்கே மேடையில் இருக்கும் மத்திய அமைச்சர் வசந்த்சாத்தே மூலம் மத்திய அரசுக்கு மீண்டும் வேண்டுகோள் விடுக்கிறோம்.

இந்த அருமையான திட்டத்தில் மத்திய அரசும் பங்கு கொண்டு தாராள உதவிகளைச் செய்யவேண்டும்.

இந்த மதிய உணவு திட்டத்திற்கு அசோக் லேலண்டு நிறுவனமும் கணிசமான தொகையை வழங்க முன் வர வேண்டும்.

குசேலரும் உதவ முன் வரவேண்டும்.

இவ்வாறு அமைச்சர் திருநாவுக்கரசு கூறினார்.

விழா துவக்கத்தில் நிர்வாகத்தின் சார்பில்

வாஷிங்டனில்

### லிப்டில் சிக்கித் தவித்த ராஜிவ், சோனியா

வாஷிங்டன், ஆக. 1— பிரதமர் இந்திராகாந்தியோடு சென்றுள்ள அவருடைய மகன் ராஜிவ் காந்தியும், மருமகள் சோனியாவும் லிப்ட் ஒன்றில் சிக்கித் தவித்தனர்.

வாஷிங்டனில் இவர்கள் தங்கியிருந்த இடத்திலிருந்து இவர்கள் லிப்டில் இறங்கிய போது இந்த சம்பவம் நடந்தது.

ராஜிவ், சோனியா மற்றவர்கள் லிப்டில்இறங்கிய போது லிப்ட் திடீர் என்று பழுதாகி விட்டது.

சுமார் 20 நிமிட நேரம் இவர்கள் லிப்டில் சிக்கி தவித்தனர். பிறகு லிப்ட் சரி செய்யப்பட்டது. இவர்கள் வெளியே வந்தனர்.

### முதல்வருக்கு அரசு அலுவலர் கழகம் நன்றி

சென்னை, ஆக 1— திருவாரூரிலிருந்த தஞ்சைக்கும் மயிலாடுதுறைக்கும் மாற்றுவதாக இருந்த வேளாண்மைப பொறியியல் துறை கோட்ட அலுவலகங்களை மாற்றுவது வேண்டாம். ஊழியர்களின் குழந்தைகள் கல்வி பாதிக்கும். அடுத்த ஆண்டுவரை நிறுத்தி வைக்குமாறு முதல்வர் புரட்சித் தலைவரையும் வேளாண்மை அமைச்சர் காளிமுத்துவையும் கேட்டுக் கொண்டதை யொட்டி மாற்றம் தள்ளி வைக்கப்பட்டுள்ளது.

ஊழியர்களின் கோரிக்கையை ஏற்று உத்தரவிட்ட முதல்வருக்கும் அமைச்சருக்கும் அரசு அலுவலர் கழகத்தின் தலைவர் எம்.வி. லட்சுமி நரசிம்மன், பொதுச் செயலாளர் மோகன் நன்றி தெரிவித்துள்ளனர்.





கீழ்க்கண்ட நீதிபதிகளின் முன்னிலையில், 31—7—82 அன்று மாடர்ன் லாட்ஜ், பாண்டிச்சேரியில் நடைபெற்ற 83-வது குலுக்கல் முடிவுகள்:-

நீதிபதிகள்:

1. திரு. பி. என். வேணுகோபால் அசிஸ்டண்ட் ஸ்டாட்டிஸ்டிகல் ஆபீசர், டைரக்டரேட் ஆப் எகனாமிக்ஸ் அண்டு ஸ்டாட்டிஸ்டிக்ஸ் பாண்டிச்சேரி
2. திரு. சி. எச். பத்மனாபன்கிரப், ஜூனியர் அக்கவுண்ட்ஸ் ஆபீசர் கவர்ன்மெண்ட் அக்ரிகல்சுரல் இன்சினீயரிங் ஓர்க் ஷாப். பாண்டிச்சேரி.
3. திரு. எம். கே. தட்சிணாமூர்த்தி பி.ஏ. பி.எல்., அட்வகேட் பாண்டிச்சேரி.

வரிசைகள்:— பி.ஓ., பி.பி., பி.கியூ.,

டிக்கெட் எண்கள்:

| | | | | |
|---|---|---|---|---|
| பி. ஓ. | 100000 | முதல் | 399999 | வரை |
| பி. பி. | 100000 | முதல் | 399999 | வரை |
| பி.கியூ. | 100000 | முதல் | 399999 | வரை |

முதல் பரிசு (1)
ரூ. 1,00,000
(எல்லாவரிசைக்கும்பொது)
பி.கியூ. 137098
(கோயம்புத்தூர்)

ஆறுதல் பரிசு (2)
ரூ. 1,000 தலா
பி. ஓ. 137098
பி. பி. 137098

2-வது பரிசு (3)
தலா ரூ. 10,000
பி.ஓ. 177699
(சென்னை)
பி.பி. 144635
(கோவை)
பி.கியூ. 175730
(கோவை)

3-வது பரிசு (90)
ரூ. 1,000 தலா
கீழ்க்கண்ட 5 இலக்கங்களில் முடியும் எல்லா சீட்டுகளுக்கும் பரிசு உண்டு.

| | |
|---|---|
| 99382 | 51123 |
| 93868 | 69853 |
| 55609 | 76511 |
| 26843 | 19465 |
| 93825 | 49253 |

4-வது பரிசு (900)
ரூ. 100 தலா
கீழ்க்கண்ட நான்கு இலக்கங்களில் முடியும் எல்லா சீட்டுகளுக்கும் பரிசுஉண்டு.

| | | |
|---|---|---|
| 0485 | 5653 | 8207 |
| 2867 | 9936 | 9763 |
| 3959 | 5387 | 6164 |
| 6336 | | |

5வது பரிசு (1800)
ரூ. 50 தலா
கீழ்க்கண்ட 4 இலக்கங்களில் முடியும் எல்லா சீட்டுகளுக்கும் பரிசு உண்டு.

| | | |
|---|---|---|
| 3604 | 8381 | 3140 |
| 7695 | 5480 | 6751 |
| 0168 | 6052 | 2537 |
| 4100 | 6215 | 5091 |
| 2998 | 0767 | 0907 |
| 0520 | 9775 | 5036 |
| 6597 | 4717 | |

6வது பரிசு (1800)
ரூ. 20 தலா
கீழ்க்கண்ட 4 இலக்கங்களில் முடியும் எல்லா சீட்டுகளுக்கும் பரிசு உண்டு.

| | | |
|---|---|---|
| 3325 | 0735 | 4868 |
| 3720 | 3438 | 6115 |
| 8945 | 1458 | 3251 |
| 9512 | 1596 | 2758 |
| 0959 | 3105 | 1774 |
| 7600 | 1465 | 8096 |
| 0449 | 1160 | |

7வது பரிசு (4500)
ரூ. 10 தலா
கீழ்க்கண்ட 3 இலக்கங்களில் முடியும் எல்லா சீட்டுகளுக்கும் பரிசு உண்டு.

975 200 492 805 873

குறிப்பு:- 3,4,5,6,7வது பரிசு பெற்றவர்கள் அவர்கள் டிக்கெட்டுகள் வாங்கிய உள்ளூர் ஏஜெண்டுகளை அணுகி அவர்களிடமிருந்து கிளைம் பார்ம்களைப் பெற்று அவற்றை நிரப்பி ஏஜெண்டுகளிடம் இருந்து பரிசுத் தொகையைப் பெற்றுக் கொள்ளலாம். முதல் பரிசு மற்றும் இரண்டாவது பரிசு பெற்ற டிக்கெட்டை வைத்திருப்பவர்கள் முதல் வகுப்பு நீதிபதி அவர்களால் ஒப்புதல் செய்யப்பட்ட பாஸ்போர்ட் சைஸ் போட்டோவுடன் மெஸர்ஸ் டெக்கான் ஏஜென்சியின் சென்னை அலுவலகத்தில் நேரடித் தொடர்பு கொண்டு பெற்றுக்கொள்ளலாம். இருந்தபோதிலும் அவர்கள் பரிசுத் தொகையை ஒருதேசியமயமாக்கப்பட்ட வங்கி மூலம் பெற விரும்பினால் அவர்கள் ஏதாவது ஒரு உள்ளூர் ஏஜெண்டிடம் இருந்து கிளைம்பார்மைப் பெற்று அதனைப் பூர்த்தி செய்து பரிசுத் தொகையை கேட்கலாம்.

டிரஷரர்
சேரிடபிள்
எண்டோவ்மெண்ட்ஸ்
பாண்டிச்சேரி

சோல் ஏஜெண்ட்ஸ்:- மெஸர்ஸ் டெக்கான் ஏஜென்சி

தலைமை அலுவலகம்:- 242-1 திருவல்லிக்கேணி நெடுஞ்சாலை சென்னை—5 போன்: 845043

கிளை அலுவலகம்:- 59, இளங்கோ நகர், பாண்டிச்சேரி- 605001 போன்: 5272

எமது அடுத்த வாராந்திர 84வது குலுக்கல்: 7—8—82
வரிசைகள்: பி.ஆர். பி.எஸ். பி.டி.
அடுத்த 85வது மினி பம்பர் 7—8—82
வரிசைகள் எம். எஸ்., எம். டி., எம். யு.

# பழுப்பு நிலக்கரி மூலம் பஸ்களை ஓட்டலாம் சோழன் செய்த ஆராய்ச்சியில் வெற்றி

மதுரை, ஆக. 1— பழுப்பு நிலக்கரி மூலம் பஸ்களை ஓட்ட முடியும் என்று சோழன் போக்குவரத்துக்கழகம் கண்டு பிடித்துள்ளது.

பழுப்பு நிலக்கரியை எரிபொருளாகப் பயன்படுத்தி பஸ்களை ஓட்ட முடியுமா என்று சோழன் போக்குவரத்துக் கழகம் சோதனை நடத்தியது.

இந்த சோதனையில் இக்கழகம் வெற்றி கண்டுள்ளது என்று அமைச்சர் எஸ். முத்துசாமி கூறினார்.

டீசலுக்கு பதில் பழுப்பு நிலக்கரியால் பஸ்களை ஓட்ட முடியும். சாதாரணமாக ஏற்றிச் செல்லும் பயணிகளுடன் மணிக்கு சராசரி 25 மைல் வேகத்தில் இந்தப் பஸ் செல்ல முடியும் என்றும் அமைச்சர் முத்துசாமி தெரிவித்தார்.

பரிசோதனை அடிப்படையில் இந்தஆராய்ச்சி நடத்தப்பட்டது. வர்த்தக ரீதியில் செயல்படுத்தும் எண்ணம் இல்லை. என்றும் அவர் கூறினார்.

அண்ணாமலை பல்கலைக் கழக பொறியாளர்களின் உதவியுடன் இந்தப் பரிசோதனை நடத்தப்பட்டது,


Published by K. Ravindran on behalf of Thangamani Publications and Printed by him at All India Anna D. M. K. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road Madras-600 029.

Editor: E. PARASURAMAN

ராசாமுகமது தகவல் :

# மேலும் காவிரி நீர்: கர்நாடக முதல்வருக்கு புரட்சித்தலைவர்கடிதம்

சென்னை, ஆக. 1 தமிழக குறுவை சாகுபடிக்கு மேலும் காவிரி தண்ணீரைக் கர்நாடகம் கொடுக்கவேண்டும் என்று முதல்வர் புரட்சித்தலைவர் கர்நாடக முதலமைச்சர் குண்டுராவுக்குக் கடிதம் எழுதியுள்ளார்.

தமிழக நீர்ப்பாசனத் துறை அமைச்சர் ராஜா முகமது நிருபர்களிடம் கூறியதாவது:—

கர்நாடகம் மேலும் தமிழகத்திற்கு தண்ணீர் கொடுக்கவேண்டும்என்று கோரி கடந்த 23-ம் தேதி அன்று முதல்வர் புரட்சித்தலைவர் கடிதம் எழுதியுள்ளார்.

ஏற்கனவே முதல்வர் புரட்சித்தலைவர் 12 டி. எம். சி. தண்ணீர் கொடுக்க வேண்டும் என்று கேட்டார். அதனைக் கொடுக்க கர்நாடகம் சம்மதம் தெரிவித்தது. மேலும் இப்போது கபினி அணைப் பகுதியில் மழை பெய்வதால் கபினி அணையில் 8 ஆயிரம் கோடி கனஅடி தண்ணீரை வைத்துக் கொண்டு மீதியைத் தமிழகத்துக்கு விடுமாறு கேட்டுக் கொண்டிருக்கிறார்.

ஆகஸ்ட் மாதம் 17, 18 ஆம் தேதிகளில் பெங்களூரில் தென் மாநில முதல் அமைச்சர்களின் கூட்டம் நடைபெற இருக்கிறது.

அதில் எப்படியும் இறுதி முடிவு ஏற்படுத்த வேண்டும் என்று தமிழக அரசு வற்புறுத்தும்.

உணவு உற்பத்திக்கு தண்ணீர் அவசியமாக பயன்படுகிறது என்பதால் இறுதி முடிவு ஏற்பட வேண்டும் என்று அரசு கருதுகிறது.

இந்த ஆண்டு தமிழகத்திலிருந்து ஆயிரம் பேர் ''ஹஜ்'' யாத்திரை செல்ல இருக்கிறார்கள். இவர்களில் 334 பேர் கப்பல் மூலம் செல்ல இருக்கிறார்கள். மற்றவர்கள் விமானம் மூலம் செல்லவிருக்கிறார்கள்.

இவ்வாறு அமைச்சர் ராஜாமுகமது கூறினார்.

கடத்தல் மன்னன்:

# பாகியா கோவாவில் மீண்டும் கைது

பனாஜி, ஆக. 1— கடத்தல்மன்னன் பாகியா கோவா—பனாஜி நீதிமன்றத்திற்கு வெளியே மீண்டும் கைது செய்யப்பட்டார்.

பாகியாவை போலீசார் கைது செய்ய முற்பட்ட போது பாகியாவின் மெய் காப்பாளர்கட்கும் போலீசாருக்கும் மோதல் ஏற்பட்டது.

அகமதாபாத் மாஜிஸ்திரேட் பிறப்பித்த உத்தரவின் பேரில் பாகியா கைது செய்யப்பட்டார்.

வருமானவரி வழக்கு சம்பந்தமாக அவரை அகமதாபாத் கொண்டு செல்கின்றனர்.



# திருச்சியில் வலம்புரி ஜான் நிகழ்ச்சிகள்

திருச்சி, ஆக 1— திருச்சி ஹோலிகிராஸ் கல்லூரியில் நாளை 2,ந் தேதி காலை 10 மணிக்கு தமிழ் இலக்கிய மன்றத்தை 'தாய்' ஆசிரியர் வலம்புரிஜான் துவக்கி வைத்துப் பேசுகிறார்.

பிற்பகல் 3 மணிக்கு பிலோமினா மேல்நிலைப் பள்ளியில் இலக்கிய மன்றத்தைத் தொடங்கி வைத்து உரையாற்றுகிறார்.

இரவு 8மணிக்கு திருச்சி வானொலியில் 'புதுக் கவிதையின் போக்குகள்' எனும் தலைப்பில் இலக்கியப் பேருரையாற்றுகிறார்.

# மதிய உணவு திட்டத்திற்கு நன்கொடை

சென்னை, ஆக 1— தமிழக அரசின் இலவச சத்துணவு திட்டத்திற்கு தமிழ்நாடு கூட்டுறவுவங்கிஊழியர்கள் ஒரு நாள் சம்பளத்தை தர முடிவு செய்துள்ளனர். அவர்கள் ரூ. 28,281ஐ நன்கொடையாக அளிக்கிறார்கள்.

தமிழ்நாடு போக்குவரத்துத்துறைஅதிகாரிகள் சங்கம் ரூ. 10 ஆயிரத்தை இரண்டாவது தவணையாக அளித்துள்ளது.

# பீகார் சட்டசபையில் அமளி; கட்டிப்புரண்டு சண்டை போட்டனர்

## உறுப்பினரிடையே அடி, உதை ரகளை

பாட்னா, ஆக 1. பீகார் மாநில சட்டசபையில் உறுப்பினர்கள் நேற்று கட்டிப்புரண்டு சண்டை போட்டனர். ஆளும் கட்சியினரும, எதிர்க்கட்சியினரும் ஒருவரைஒருவர் அடித்துக் கொண்டனர். மக்கள் கட்சி பெண் உறுப்பினர் ராம்நைக்கா குப்தா நிருபர்களின் மேஜை மேல் ஏறி நின்று சபாநாயகர் மீது பேப்பர் வெயிட்டை வீசி எறிந்தார்.

பீகார் மாநில சட்டசபையில் நேற்று முதலமைச்சர் ஜகன்னாத் மிச்ரா ஆபாசம், ஆட்சேபகரமான செய்திகள் பிரசுரிக்கப்படுவதை கட்டுப்படுத்தும்மசோதாவை தாக்கல் செய்த போது சட்டசபையில் ஏக அமளி ஏற்பட்டது.

மசோதாவில் காணப்படும் சில விவரங்கள் குறித்து எதிர்க்கட்சிஉறுப்பினர்கள் ஆட்சேபத்தை எழுப்பினார்கள். இதைத் தொடர்ந்து ஆளுங்கட்சி உறுப்பினர்களும் எதிர்க் குரல் விடுத்தனர்.

இதை எதிர் பார்த்துக் கொண்டிருந்தது போல எதிர்க்கட்சி உறுப்பினர்கள் உரத்தக்குரலில் ஆளுங்கட்சியையும் முதலமைச்சர் ஜகன்னாத் மிச்ராவையும் கண்டித்து கோஷங்கள் எழுப்பினர், இந்த ரகளையின் போது ஆளுங் கட்சிஉறுப்பினர்களும் எதிர்கட்சி உறுப்பினர்களும் கட்டிப் புரண்டு சண்டை போட்டனர். ஒருவரை பிடித்து மற்றொருவர் அடித்து உதைக்க அவர்களைப் பிடித்து காவலர்கள் ஒருபுறம் தள்ள சட்டசபை ஏக கலாட்டாவாக இருந்தது.

எதிர் கட்சிகள் மசோதாக்களையும், சம்பந்தப்பட்ட தஸ்தாவேஜுகளையும் கிழித்து எறிந்தனர்.

சில உறுப்பினர்கள் நிருபர்கள் காலரி மீது பாய்ந்து அவர்களின் ரிப்போர்ட் புத்தகங்களையும் கிழித்து எறிந்தனர்.

மக்கள் கட்சி பெண் உறுப்பினர் ராம்நைக்கா குப்தா நிருபர்கள் எழுதிக் கொண்டிருந்த மேஜை மீது ஏறி நின்று 'பேப்பர்வெயிட்' ஒன்றை சபாநாயகர் இருப்பிடத்தை நோக்கி வீசினார்.

இந்த அமளிகளுக்கிடையே சட்டசபையை 3 முறை சபாநாயகர் ஒத்திவைக்க நேர்ந்தது. ஒத்திவைப்பு நேரம் முடிந்து சட்டசபை மீண்டும் கூடிய போது ரகளையும் கூடவே ஆரம்பமாயிற்று.

இந்த சட்ட மசோதா நிருபர்களை மட்டுமல்ல பத்திரிக்கைகளை நடத்தும் அனைவரையும் பாதிக்கும் என்றும் பல உறுப்பினர்கள் எதிர்ப்புத் தெரிவித்தனர் இந்த அமளி துமளிக்கிடையேயும் அந்தப் பிரச்னைக்குரியமசோதா சட்ட சபையில் நிறைவேறியது.

சட்டசபையும் தேதி குறிப்பிடப்படாமல் ஒத்தி வைக்கப்பட்டது.

சென்னையில்

யுனெஸ்கோ கண்காட்சி

# அமைச்சர் காளிமுத்து திறந்துவைத்தார்

சென்னை, ஆக. 1— உலக நாடுகள் நிறுவனமான யுனெஸ்கோவின் தமிழகக் கிளையின் 12வது ஆண்டு விழாவை வையொட்டி ஒரு கண்காட்சி துவக்க விழா நடநதது. 'குறிஞ்சி மலர்' என்ற நூலையும் திருவள்ளுவரும் திருக்குறளும் என்ற ஆங்கில நூலையும் அமைச்சர் காளிமுத்து வெளியிட்டார்.

இநத நூலின் முதல் பிரதியை முன்னாள் நாடாளுமன்ற கழகஉறுப்பினர் சி.என். விசுவநாதன் பெற்றுக்கொண்டார்.

''யுனெஸ்கோ'' நிறுவனம் நடத்திய கட்டுரை கவிதைப் போட்டியில் வெற்றி பெற்றவர்களுக்கும் கண்காட்சியை அமைத்த இளைஞர்களுக்கும் அமைச்சர் காளிமுத்து பரிசுகள் வழங்கினார்.

இக்கண்காட்சி சென்னை மாவட்ட மத்திய நூலகக் கட்டிடத்தில் ஒரு வாரத்துக்கு வைக்கப்பட்டுள்ளது.

யுனெஸ்கோவின் தமிழக கிளைத் தலைவர் ஆர். முத்துக்குமாரசாமி வரவேற்றுப் பேசினார்.

# அரக்கோணத்தில் கடற்படை விமான தளம் அமைகிறது

சென்னை, ஆக 1. சென்னை அருகே அரக்கோணத்தில் கடறபடை விமானதளம அமைக்கப்படுகிறது இந்தியாவில் மூன்றாவது தளமாக இது இருக்கும்

கடற்படை தலைமை தளபதி அட்மிரல் ஏ.எஸ் தாசன் இநதத் தகவலை வெளியிட்டுள்ளார்.

கடற்படை தலைமை தளபதி கூறியதாவது:—

இப்போது கோவாவிலும் கொச்சியிலும் கடற்படை விமான தளங்கள் உள்ளன. அரக்கோணத்தில்அமைய இருப்பது 3 வது தளமாக இருக்கும்.

கடற்போர்களில் விமானங்கள் முக்கிய பங்கு வகிக்கின்றன. இதனை பாக்லண்டு போர் நமக்கு எடுத்துக் காட்டியிருக்கிறது.

கடற்படையில் மிக நவீன இயந்திரங்களைப் புகுத்துவதில் கவனம் செலுத்தப்பட்டு வருகிறது.

இந்தியக் கடற்படையில் சந்தியாக் என்ற சர்வே கப்பல் புதிதாக சேர்ந்துள்ளது.

இவ்வாறு தாசன் கூறினார்.